بسم الله الرحمن الرحيم

## காயல்பட்டினத்தில் உலமாக்கள் விவாத அரங்கு

அன்புடையீர்;

அஸ்ஸலாமு அலைக்கும். பல வருடங்களாக நமதூரில் தப்லீக் ஜமாஅத்தையும், அதன் நிறுவனர் மவ்லானா இல்யாஸ் (ரஹ்) மற்றும் அவர்களது ஆசிரியர்களையும் பொதுமேடைகளில் சில ஆலிம்கள் கேவலமான குற்றச்சாட்டுகளை சுமத்தி, தப்லீகை சார்ந்தவர்களும், அதன் தலைவர்களும் வழிகேடர்கள் என்றும், அதிலும் சிலர் ஒரு படி மேலே சென்று தப்லீகின் நிறுவனர், அவரின் ஆசிரியர்கள் அனைவரும் காபிர்கள் என்றும் பகிரங்கமாக பேசி வந்தார்கள். இந்தப் பேச்சுக்கள் நடுநிலையான மக்களை வெகுவும் பாதித்து இவர்களின் குற்றச்சாட்டுகளுக்கு ஏன் தப்லீக் ஜமாஅத்தினர்கள் பதில் அளிப்பதில்லை? மௌனமாக இருப்பதேன்? என்பன போன்ற பல ஐயங்கள் அவர்களின் உள்ளங்களில் தோன்ற ஆரம்பித்தன. ஆதலால் நடுநிலையான சில நல்லவர்கள் குறிப்பாக அல்ஹாஜ் வாவு ஷம்சுத்தீன், அல்ஹாஜ் பாளையம் ஹபீப் முஹம்மது, அல்ஹாஜ் வட்டம் ஹஸன் மரைக்காயர் போன்றவர்கள் தப்லீக் ஜமாஅத்தினரை அணுகி எதிரணியினரின் குற்றச்சாட்டுகளுக்கு பதில் அளித்தால் என்ன! நடுநிலை மக்கள் குழம்பிப் போய் இருக்கிறார்களே! ஆகவே இரு சாராரும் உட்கார்ந்து பேசி விவாதம் செய்து நல்லதொரு முடிவுக்கு வந்தால் ஊர் மக்களுக்கு உண்மை நிலவரம் தெரியவரும் என்று சொன்னதின் அடிப்படையில் நாங்கள் பேச்சு வார்த்தை நடத்த ஒத்துக் கொண்டோம்.

சென்ற ஜூன் 1998-ல் அல்பாக்கியாத் பேராசிரியர் மவ்லவி அப்துல்வஹ்ஹாப் மக்கி காஷிபி அவர்களை காணும் WMM செய்யது முஹம்மது ஆலிம் பாகவி, SMH ஜைனுத்தீன் ஆலிம் ரஹ்மானி, தைக்கா ஷுஐபுத்தீன் ஆலிம் மஹ்ழரி ஆகியோரை சந்திக்க நடுநிலையாளர்கள் ஏற்பாடு செய்து கருத்து பரிமாற்றம் செய்ய வழி வகுத்தார்கள். அந்த சந்திப்பில் WMM செய்யது முஹம்மது ஆலிம் அவர்களும், ஜைனுத்தீன் ஆலிம் அவர்களும் தப்லீக் சம்பந்தமான பிரச்சனைகளை இரு சாராரை சேர்ந்த உலமாக்களும் கூடி விவாதிக்கலாம் என்று கூறினார்கள். மௌலவி அப்துல்வஹ்ஹாப் மக்கி அவர்களும் அதை சரி கண்டு கூட்டத்தை ஏற்பாடு செய்யும் படி நடுநிலையாளர்களை வேண்டிக் கொண்டார்கள்.

அதனடிப்படையில் சென்ற 11.8.98 செவ்வாய் கிழமை

5 மாலை 5 மணியளவில் அல்ஹாஜ் வாவு காதிர் சாஹிப் அவர்கள் இல்லத்தில் கூட்டத்தை நடத்த தீர்மானித்து இரு தரப்பின் உலமாக்கள் கையெழுத்திட்டு ஒப்புதல் அளித்தனர். மாலை கூட்டத்திற்கு அல்ஹாஜ் S.S.K. மஸ்தான் ஆலிம் ரஹ்மானி அவர்களும், மக்ரிபுக்குப் பிறகு நடைபெறும் கூட்டத்திற்கு கலீபத்துல் குலபா முத்துவாப்பா ஆலிம் அவர்களும் தலைமை தாங்குவதென முடிவு செய்யப்பட்டது.

பார்வையாளராக தப்லீக் இயக்கத்திலிருந்து மூன்று நபர்களும், அவர்களின் சார்பாக மூன்று நபர்களும் கலந்து கொள்ள முடிவு செய்யப்பட்டது. 11.8.98 அன்று மாலை 4.30 மணியளவில் கூட்டத்தில் கலந்து கொள்ள எங்கள் அணியினர் வந்த போது கூட்டத்திற்கு ஏற்பாடு செய்த நடுநிலையாளர்கள் எங்களை அழைத்து, தற்சமயம் இரு சாராரின் பார்வையாளர்களை தவிர்த்து விட்டு நாங்கள் உலமா ஹாஜி அவர்களும் நாங்களுமே வரும் கலந்து கொள்கிறோம் என்று சொன்னதும் எங்களுக்கு பேரதிர்ச்சியாகி விட்டது. நாங்கள் ஜமாஅத் மஷூரா செய்து அதில் மூன்று நபர்களை தெரிவு செய்து அவர்களும் இங்கு வந்து விட்டார்களே! அவர்களை எவ்வாறு நாங்கள் திருப்பிப் போகச் சொல்வது, இது முறையல்லவே என்று கலீபத்துல் குலபா அவர்கள் கவலையாக வாதாடினார்கள். பிறகு நாங்கள் மஷூரா செய்து பார்வையாளர்களை தவிர்க்க ஒப்புக் கொண்டு பார்வையாளர்களை போகச் சொல்லிவிட்டோம்.

தப்லீக் சார்பாக கலீபத்துல் குலபா அவர்கள் தலைமையில் ஜமாஅத் பேராசிரியர்களும், மவ்லவி அப்துல்லா மக்கி காஷிபி, மௌலவி கல்கி ஆலிம் பாஸில், மௌலவி M.A. நூஹ் ஹாமிம் ஆலிம் பாஸில், அப்துல் வஹாப் ஆலிம் பாஸில், M.N. அப்துல் காதிர் ஆலிம் பாஸில், A.H. ஷேக் ஆலிம் பாஸில், M.S. நுஹ்கி ஆலிம் பாஸில், M.A. ஜாபர் ஆலிம் பாஸில் (யூசுபிய்யா பேராசிரியர்) மௌலவி புகாரி ஆலிம் காஷிபி ஆகியோரும் கலந்து கொண்டோம். எதிர் தரப்பில் WMM செய்யிது முஹம்மது ஆலிம், ஸைபுத்தீன் ஆலிம் ரஹ்மானி ஆகியோரின் தலைமையில் மஹ்ழராவின் பேராசிரியர்களும், மௌலவி தேங்கை ஷர்புத்தீன் மிஸ்பாஹி, A.K. அபூ மன்சூர் ஆலிம் மஹ்ழரி, கலீபா முஹம்மது அலி ஆலிம் மஹ்ழரி மற்றும் சில உலமாக்களும், நடுநிலையாளர்களாக அல்ஹாஜ் S.K. நூஹ் தம்பி ஆலிம் ஜீலானி, அல்ஹாஜ் S.K. ஷெய்கு அப்துல்லா ஆலிம், அல்ஹாஜ் ஃபாரூக்

ஆலிம் ஃபாஸி, செ. காதி அஸ்வுத்தீன் ஆலிம் ஆகியோரும் கலந்துகொண்டனர்.

கூட்டம் சரியாக மாலை 3 மணிக்கு உவைஸ் ஹாஜியாரின் கிராஅத்துடன் அல்ஹாஜ் S.S.K. மஸ்தான் ஆலிம் அவர்கள் தலைமையில் ஆரம்பமானது. தலைமையுரைக்குப் பிறகு கஃபத்துல்லா அவர்களும் மற்றும் சில ஆலிம்களும் பேசும் போது நிதானத்தைக் கடைபிடித்து அடுத்தவர்களை சாடாமல் கருத்தை தெரிவிக்கும்படி வலியுறுத்திக் கேட்டுக்கொண்டனர். WMM செய்யது முஹம்மது ஆலிம் பாகவி அவர்களும், S.M.H. ஸைபுத்தீன் ஆலிம் ரஹ்மானி அவர்களும் பேசும் போது தப்லீக் ஜமாஅத்தில் வஹாபிசம் உள்ளது. தப்லீக் ஜமாஅத்தின் நிறுவனர் மௌலானா இல்யாஸ் அவர்களின் குமாரர் வஹாபிஸத்தையும், அதன் நிறுவனரையும் தங்களின் கடிதங்களில் போற்றிப் புகழ்ந்துள்ளார்கள். ஆகவே தப்லீக் ஜமாஅத்தும் வஹ்ஹாபிய இயக்கம்தான் என்பதில் சந்தேகம் இல்லையென்றும் அதற்கு ஆதாரமாக இல்யாஸ் மௌலானாவின் குமாரர்கள் எழுதிய உருது கடிதங்களை ஆதாரம் காட்டத் தயார் என்றும் என்றும் கூறினார்கள். இவ்விருவரின் பேச்சிற்குப் பிறகு தலைவர் அவர்கள் எங்களை பார்த்து உங்களின் பதிலென்ன என்று கேட்க அதற்கு நாங்கள் அந்த நூல்களை தாருங்கள், பரிசீலித்து இன்ஷா அல்லாஹ் பதில் தருவதாக கூறினோம். அதற்கு ஸைபுத்தீன் ஆலிம் அவர்கள் மஃரிபுக்குப் பின் நடைபெறும் கூட்டத்தில் நூல்களை சமர்ப்பிப்போம் என்று சொன்னார்கள். இதற்கிடையில் மஃரிபுக்குப் பின் S.S.K. மஸ்தான் ஆலிம் ஒரு கூட்டத்தில் கலந்து கொள்ள வெளியூர் செல்ல இருப்பதால் மஃரிபுக்குப் பிறகு நடைபெறும் கூட்டத்தில் கலந்து கொள்ள இயலாமைக்கு வருத்தம் தெரிவித்தார்கள். அச்சமயம் ஸைபுத்தீன் ஆலிம் அவர்கள் மஸ்தான் ஆலிம் அவர்கள் தலைமையில் தான் கூட்டம் நடைபெற வேண்டும். ஆகவே நாளை காலை கூட்டத்தை நடத்தலாம் என்று சொல்ல, நாங்களும் ஆமோதித்து மஃரிபுக்கு முன் கூட்டத்தை நிறைவு செய்தோம்.

இதற்கிடையில் கூட்டத்தை ஏற்பாடு செய்தவர்களிடம் எதிர் தரப்பினர் குற்றம் சாட்டும் நூல்களை வாங்கித் தர வேண்டிக் கொண்டதில் இரவு 9 மணிக்கு வாவு காதிர் சாஹிபு ஹாஜி வீட்டில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த விருந்துக்கு வரும் பொழுது நூல்களை கொண்டுவருவோம். இவைகளை வாங்கித் தருவதாக [illegible] அவர்கள் சொன்னார்கள். நாங்கள்

அனைவரும் ஜாமியா சென்று மக்ரிபு தொழுதபின் அந்த நாள் காலை-
-யில் எவ்வாறு விவாதம் செய்வது? யார் யாரெல்லாம் பேசுவது? எவைகளை வைத்து ஆதாரம் காட்டுவது? போன்ற விஷயங்களை எங்களுக்கு மத்தியில் விரிவாக ஆலோசனை செய்தோம். இதற்கிடையில் 12/8-காலை கல்கி ஆலிம் ஃபாஸி வெளியூர் செல்ல ஏற்கனவே டிக்கட் எடுத்துவிட்டார். உலமாக்களின் வேண்டுகோளை ஏற்று தனது பிரயாணத்தை தள்ளி வைத்து கூட்டத்தில் கலந்து கொள்ள முடிவு செய்யப்பட்டது.

விவாதத்திற்கு எடுத்துச்செல்ல கிதாபுகள்:-

(1) அப்துல் வஹாப் ஆலிம் ஃபாஸி காண்பித்த முஹ்யித்தீன் அப்துல்காதிர் ஜீலானி (ரஹ்) அவர்களால் எழுதப்பட்ட غنية الطالبين என்ற கிதாபில் உள்ள ஒரு வாசகம்.

(2) கல்கி ஆலிம் ஃபாஸி காண்பித்த شواهد الحق என்ற கிதாபில் علامة ابن تيمية அவர்களைப்பற்றி الحافظ ابن حجر العسقلاني புகழ்ந்து கூறிய வாசகங்கள்

(3) அப்துல்வஹ்ஹாப் மக்கி காஷிபி ஆலிம் அவர்கள் காண்பித்த தேவ்பந்த் உலமாக்களின் عقيدة தொகுப்பான المهند على المفند என்ற நூல்

(4) மௌலவி கலீல் அஹ்மது ரேஜ்வி அவர்கள் மொழியாக்கம் செய்த தப்லீகின் மீது தவறான குற்றச்சாட்டுகளும், தக்க பதில்களும் என்ற தமிழ் புத்தகம் ஆகியவற்றை விவாத அரங்கிற்கு எடுத்து செல்ல முடிவு எடுக்கப்பட்டது. மேற்கூறப்பட்ட கிதாபுகளின் வாசகங்களை நாங்கள் அனைவரும் வாசித்து தெளிவுபெற்றோம் الحمد لله.

இரண்டாவது நாள் 12-8-98 புதன் கிழமை காலை 10 மணி அளவில் S.S.K. மஸ்தான் ஆலிம் தலைமையில், அல்ஹாபிழ் M.A. நாஸிர் ஆலிம் ஃபாஸி கிராஅத் ஓத கூட்டம் ஆரம்பமானது. தலைமையுரையில் தலைவர் அவர்கள் நேற்றைய கூட்டத்தின் சாராம்சத்தை சுருக்கமாக கூறிவிட்டு விவாதத்தை ஆரம்பிக்க எதிர் தரப்பினரிடம் வேண்டுகோள் விடுத்ததும் மௌலவி ஜைனுத்தீன் ஆலிம் அவர்கள் தப்லீக் ஜமாஅத்தின் நிறுவனர் இல்யாஸ் மௌலானா அவர்களின் குரு வாகிய மௌலானா ரஷீத் அஹ்மது கங்கோஹி அவர்கள் தங்களின் ஃபத்வா தொகுப்பான فتاوى رشيدية வில்

வஹ்ஹாபிஸத்தையும், அதன் நிறுவனரான முஹம்மதிப்னு அப்துல் வஹ்ஹாப்
நஜ்தியையும் புகழ்ந்தும் ஆதரித்தும் கொடுத்த இரு ஃபத்வாக்களை படித்தும்
தமிழில் மொழி பெயர்த்தும் கூறினார்கள். இவ்விரு ஃபத்வாக்களும் வஹ்ஹாபியத்தை
ஆதரித்ததற்கு ஆதாரமாக உள்ளது என்றும் கூற தலைவர் அவர்கள் ஸையுத்தீன்
ஆலிம் அவர்களின் கூற்றுக்கு பதில் அளிக்கும் படி எங்களை வேண்டிக்கொண்டார்கள்.
மௌலவி ஸையுத்தீன் ரஹ்மானி அவர்கள் தாம் படித்துக் காண்பித்த கிதாபை எங்களிடம்
தந்து இது உண்மையான பிரதி தானா? என்பதைக் விளக்கும் படி கேட்டுக் கொண்டார்கள்.
அந்த கிதாபை மௌலவி அப்துல்லா மக்கி அவர்கள் பெற்றுக் கொண்டு அதன் ஆரம்ப
முடிவு பக்கங்களை பார்வையிட்டு விட்டு இது [illegible] பதிப்பகத்-
-திலிருந்து வெளியான மாதிரி தோற்றம் தெரிகிறது. ஆனால் பதிப்பகத்தின் [illegible]
பெயரை ஒரு தாளில் எழுதி ஒட்டப்பட்டுள்ளது என்று சொல்ல தலைவரும்
மற்றவர்களும் பார்வையிட்டு ஒட்டப்பட்டதை ஒப்புக் கொண்டு வேறு பதிப்பகங்-
-களில் இது போன்ற ஒட்டுதல் நடைமுறையில் இருக்கத்தான் செய்கிறது.
இருந்தாலும் உங்களுக்கு சந்தேகம் இருந்தால் ஜாவியாவிலிருந்து கிதாபு
கொண்டு வரலாம் என்று சொன்னார்கள். ஜாவியாவில் فتاوی رشیدیہ இல்லை
என்றதும் மவ்லூராவிலிருந்து எடுத்து வருவதற்காக ரபீக் ஆலிம் பாகவி
சென்றார். அரைமணி நேரம் கழித்து கிதாபு இல்லை என்று திரும்பி வந்து-
விட்டார். இறுதியில் M.N. அப்துல் காதிர் ஆலிம் ஃபாஸில் தன்னிடம்
فتاوی رشیدیہ இருப்பதாக சொன்னதும் அதைக் கொண்டு வரும்படி சொன்னதில்
அவர் கொண்டு வந்து விட்டார். எங்களின் கிதாபையும் அவர்களின் கிதாபையும்
சரிபார்த்து இரண்டும் ஒரே பிரதி தான் என்பதை உறுதி செய்து கொண்டு
எங்கள் அணியினர் தனி அறைக்கு சென்று மஷூரா செய்தோம். அந்த
ஃபத்வாக்களை கூர்ந்து கவனித்து சரிபார்த்ததில் மவ்லானா ரஷீத் அஹ்மது
கங்கோஹி அவர்கள் அப்துல் வஹ்ஹாப் நஜ்தியைப் பற்றி கேள்விப்பட்டதை
வைத்து ஃபத்வா கொடுத்துள்ளார்கள். அந்த ஃபத்வாவில் நான் கேள்விப்
பட்ட வரை என்கின்ற வாசகம் உள்ளதால் அவர்கள் தீர்க்கமாக ஆராய்ந்து
கொடுக்கவில்லை என்பதை விளங்கிக் கொண்டோம்.

முதல்வர் கலீல் ஆலிம் ஃபாஸிலும் அவரை அடுத்து மௌலவி
அப்துல்லா மக்கி காஸிமி அவர்களும் பேசுவதென்று மஷூரா செய்யப்பட்டு
திரும்ப அரங்கினுள் சென்றோம். முதலில் கலீல் ஆலிம் பேசும்போது -

தெளிவாக கூறியிருக்கிறார்கள். நதுவல் மக்தூம் ஆசிரியர் அவர்களும் வஹாபிகளை காரிஜியாக்களைப் போன்றவர்கள் என்றே சொல்கிறார் என்ற வாசகத்தை படித்தும் தமிழாக்கம் செய்தும் அப்துல்லா மக்கி ஆலிம் பேசினார். முடிவாக மௌலானா ரஷீத் அஹ்மது காங்கோவி அவர்களின் பத்வாவை அவர்களுக்குப் பிறகு வந்தவர்கள் ஆதரிக்கவில்லை என்பது தெளிவாகிறது. ஆகவே அந்தப் பத்வா மாற்றப்பட்டு விட்டதாகவே பொருள் என்று பேசி முடித்து விட்டார்கள்.

ஆனால் எதிர்ப்பாளர்கள் இந்தக் கருத்தை ஏற்றுக் கொள்வதாக இல்லை. ரஷீத் அஹ்மது காங்கோவி மௌலானா அவர்கள் தங்களின் தவறுக்கு பகிரங்கமாக வருத்தம் தெரிவிக்கவில்லை. ஆகவே அவர்கள் வஹாபிக் கொள்கை-யில் உடன்பாடுள்ளவரே! என்று மீண்டும் கூறிக் கொண்டே இருந்தனர். மேலும் எங்களைப் பார்த்து நீங்கள் படித்த கிதாபு அரபி உருது மொழியில் தான் உள்ளது தமிழ் மொழியில் இல்லையே என்று சொல்ல கல்வி ஆலிம் ஃபாஸி நபியின் மீது தவறான குற்றச்சாட்டுகளும், தக்க பதில்களும் என்ற புத்தகத்தை காண்பித்து இதில் மௌலானா ரஷீத் அஹ்மது காங்கோவி அவர்கள் கொடுத்த பத்வாவைப் பற்றி விவாதிக்கப்பட்டுள்ளது என்று கூறி அந்த வாசகத்தையும் படித்துக் காண்பித்தார். எதிர்ப்பாளர்கள் மறுத்துக் கொண்டே இருந்தனர். இதனிடையே கல்வி ஆலிம் ஃபாஸி எதிர்ப்பாளர்களைப் பார்த்து இப்னு தைமிய்யாவைப் பற்றி உங்கள் கருத்தென்ன? என்று கேட்க தலைவர் இடைமறித்து இந்தக் கேள்வி தேவை இல்லாத ஒன்று. எனவே அதைப் பற்றி பேச வேண்டாம் என்று கூற நாங்கள் அனைவரும் ஒருமித்த குரலில் எங்களின் கேள்விக்குப் பதில் சொல்லவேண்டும் என்று கூறினோம். அதற்கு தலைவர் அவர்கள் இப்னு தைமிய்யாவைப் பற்றி, உலமாக்கள் வழிகெட்டவர் என்று தீர்ப்பை அளித்து விட்டார்கள். ஆகவே அவரைப் பற்றி விவாதிக்க வேண்டாம் என்று கூற கல்வி ஆலிம் ஃபாஸி அவர்கள் குறுக்கிட்டு நாமெல்லாம் ஏற்றுக் கொள்ளக் கூடிய ஹதீஸ் கலையில் தலை சிறந்தவர்களான الحافظ ابن حجر العسقلاني - அவர்கள், ابن تيمية வைப் பற்றி போற்றிப் புகழ்ந்ததும் மட்டுமல்லாமல் அவரை شيخ الإسلام என்று கூட புகழ்ந்துள்ளார்களே என்று சொன்ன சமயம் அல்ஹாபிழ் M.A. நூஹ் ஆலிம் பாஸி அவர்கள் [illegible] என்ற சுன்னத் வல் ஜமாஅத்துடைய கிதாபை எடுத்து அப்துல் வதூத் ஆலிம் பாஸி-யிடம் படிக்க சொல்ல, அப்துல் ஹக் ஆலிம் ஃபாஸி அந்த நீண்ட வாசகத்தை படிக்க தலைவர் மீண்டும் குறுக்கிடுகிறார்.

علامة ابن حجر அவர்கள் இப்னு தைமிய்யாவை பேரறிஞர் என்று தான் சொல்கிறார். உண்மையில் அவர் பேரறிஞர் தான். ஆனால் உலமாக்கள் ஏகோபித்து அவரை வழிகேடர் என்று சொன்னது தான் முடிவானது என்று தலைவர் சொல்லும் போது அல்ஹாஃபிழ் M.A. நாஸர் ஆலிம் பாஸி அவர்கள் علامة ابن حجر அவர்கள் ஏன் இறுதியாக முடிவாக சொன்ன வார்த்தையை அப்தில் வதூத் ஆலிம் அவர்களிடம் படித்துக் காண்பிக்க சொன்னார். முடிவான வாசகத்தில் "ابن تيمية அவரும் ஒரு மனிதர் தான். மனிதனின் இயல்பில் நன்மை புரிதலும், தீமை புரிதலும் உண்டு. இவர் அதிகமாக சரியானவைகளை சொல்லி இருப்பதால் அவைகளை நாம் பின்பற்றலாம். அவர் தவறிழைத்தவைகளில் நாம் அவரை பின்பற்ற வேண்டிய அவசியமில்லை. உதாரணமாக... الزيارة والطلاق مسئلة என்ற வாசகத்தை படித்து விட்டு ابن تيمية அவர்களைப் பின்பற்ற வேண்டும் என்று علامة ابن حجر அவர்கள் சொல்லியிருக்கிறார்கள் உங்களின் கருத்துப் படி علامة ابن حجر அவர்களும் வழிகெட்டவர் தானே. என்று அப்தில் வதூத் ஆலிம் கேட்டு விட்டு, غنية الطالبين என்ற நூலை படிக்க முற்படும் போது தலைவர் அவர்கள் படிக்க வேண்டாம் என்று வேண்டுகோள் வைக்க நாங்கள் அதை படிப்பதை தவிர்த்து விட்டோம்.

غنية - வல் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்கள் வழிகெட்ட 72 கூட்டத்தாரைப் பற்றி பேசும் போது ஹனபி மத்ஹபின் தலைவர் இமாம் அபூ ஹனீஃபா (ரஹ்) அவர்களைச் சார்ந்த சிலரை வழிகெட்ட கூட்டத்தில் சேர்த்துள்ளார்கள். இந்த வாசகத்தை படித்தால் பல வகையான பிரச்சனை ஏற்படும் என்பதை உணர்ந்த தலைவர் அதை படிக்க வேண்டாமென்று கேட்டுக் கொண்டார்கள். அத்துடன் ابن تيمية - வைப் பற்றி علامة ابن حجر போன்றவர்கள் நல்ல அபிப்பிராயம் கொண்டிருந்தாலும் சுன்னத் வல் ஜமாஅத் கொள்கைப் படி அவர் வழிகேடர் தான் என்ற முடிவு கருத்தை எட்டும் சமயம் மௌலவி அப்துல்லா மக்கி ஆலிம் அவர்கள் கேட்டுவிட்டு தலைவர் அவர்கள் ابن تيمية வைப்பற்றி என்ன முடிவை கூறினார்களோ. அதை நாங்களும் ஏற்றுக் கொள்கிறோம். அத்துடன் இது போன்ற கருத்தை தான் நாங்கள் மௌலானா ரஷீத் அஹ்மது கங்கோஹி அவர்கள் கொடுத்த [illegible] வையும் கையாள்கி-றோம். அதாவது முஹம்மது இப்னு அப்தில் வஹ்ஹாப் நஜ்தியைப் பற்றி, தான் கேள்விப் பட்டதை வைத்து மௌலானா ரஷீத் அஹ்மது கங்கோஹி அவர்கள்

நல்லவரென்று ஃபத்வா கொடுத்து விட்டார்கள். அவருக்குப் பிறகு வந்த [illegible] علماء அவருடைய நடவடிக்கைகளை நல்ல முறையில் ஆராய்ந்து உலமாக்களும் அதன் நிருவனமும் அவரைப் பின்பற்றுபவர்களும் வழிகேடர்களே என்று தீர்ப்பு சொல்லி விட்டதால் மௌலானா ரஷீத் அஹ்மது கங்கோஹி அவர்களின் ஃபத்வா-ஃதாவா ஆகிவிட்டது என்று முடிவுரை சொல்லி விட்ட பின் எதிரணியினரில் ஒரு மௌலவி அந்த ஃபத்வா-வில் தங்களுக்கு உடன்பாடில்லை என்ற கருத்து தெரிவித்து உலமாக்க-ளுக்கு இருக்குமானால் ஏன் அந்த கிதாபை பதிப்பித்து வெளியிடுகிறார்கள். அந்த ஃபத்வா வை கிதாபை விட்டும் அகற்றி விடலாமே என்று கூற மௌலவி அப்துல் வஹ்ஹாப் ஆலிம் பாகவி அவர்கள் பதில் சொல்லும் போது இடையில் குறுக்கிட்டு (முஹைய்யுத்தீன் ஆலிம்; WAMA செயலாளர் முஹம்மது ஆலிம் ஆகியோர் நாங்கள் வாசகத்-தை எடுக்க சொல்லவில்லை என்று தன்னிலை விளக்கம் அளித்தார்கள். மௌலானா ரஷீத் அஹ்மது கங்கோஹி அவர்கள் கொடுத்த இந்த ஃபத்வா-வில் எங்களுக்கு உடன்பாடில்லை என்று தான் சொல்கிறோமே தவிர அவர்களுடைய கிதாபு உடன்பாடு இல்லை என்று நாங்கள் சொல்லவில்லை என்பதை தெளிவாக விளங்கிக் கொள்ள வேண்டும்.

ஒரு கிதாபை எழுதியவர் ஒரு விஷயத்தில் தவறான கருத்துடையவராக இருப்பதால் அவருடைய கிதாபை அகற்ற வேண்டும் என்பது பல பாதகங்களை ஏற்படுத்தும். வாசகங்களை எழுதியவர் தான் அகற்ற முடியுமே தவிர மற்றவர்களுக்கு உரிமை இல்லை. உதாரணமாக ஈஸால் தவாபு விஷயத்தில் ஷாஃபிஈ (ரஹ்) சேராது என்று தீர்க்கமாகச் சொல்கிறார்கள் மற்ற மூன்று இமாம்களும் சேரும் என்று கூறுகிறார்கள். நாம் [illegible] விஷயத்தில் நமது மத்ஹபிற்குரிய இமாமை பின் தொடராமல் மற்ற மூன்று இமாம்களின் கருத்துப்படி தான் அமல் செய்து வருகிறோமே தவிர ஷாஃபிஈ அவர்களின் இந்த வாசகம் உள்ள கிதாபை அகற்ற முற்பட-வில்லை. அதே போன்று غنية الطالبين، تفسير الجلالين ஆகியவற்றையும் அகற்றவில்லை. மேலும் ஸிஹாஹ் கிதாபுகளில் ضعيف ழயீஃபான ஹதீஸ்கள் இருக்கத்தான் செய்கின்றன. விரிவுரையாளர்கள் அவைகளை தரம் பிரித்து சுட்டிக் காண்பிக்க தவறுவதில்லை. அவைகளை எடுத்து விடும்படி இதுவரை யாரும் சொல்லவில்லை என்று கூறி பேச்சை முடித்துக் கொண்டார்.

தலைவர் அவர்கள் கணம் உவைஸ் ஹாஜியார் அவர்களை

சில கருத்துக்களை சொல்லும்படி கேட்டதும் உவைஸ் ஹாஜியார் அவர்கள் எழுந்து பேசும் போது ஏறத்தாழ 5 மணி நேரங்கள் விவாதிக்கப்பட்டுள்ளது. தப்லீகை எதிர்ப்பவர்கள் ஒரு தலைப்பு விஷயமாக விளக்கம் கேட்டார்கள் அதற்கு தப்லீகின் ஆதரவாளர்கள் நாங்கள் வஹாபிகள் இல்லை என்பதை தெளிவு படுத்தினார்கள். எங்களுக்கு (உவைஸ் ஹாஜி) திருப்தியாக இருந்தது. நாங்களும் (ஷிராணி) அவர்களின் கருத்தை சரிகண்டு இருக்கிறீர்கள். ஆகவே முடிவுக்கு வந்து விட்டு மற்ற பிரச்னைகளைப்பற்றி விவாதிக்-கலாம் என்று சொல்லி விட்டு அமர்ந்து விட்டார்கள்.

தலைவர் முடிவான கருத்தை சொல்லும் போது மௌலானா ரஷீத் அஹ்மது கங்கோஹி அவர்கள் தங்களின் ஃபதாவா ரஷீதிய்யா-வில் வஹாபியத்தை புகழ்ந்து கொடுத்துள்ள இரு ஃபத்வா-க்களை இங்கு வந்த தப்லீக் உலமாக்கள் ஆதரிக்கவில்லை என்பதே அவர்களின் நிலைப்பாடு என்று சொல்லி விட்டு மற்ற பிரச்னைகளைப் பற்றி விவாதிக்கலாம் என்று சொல்ல நாங்கள் அனைவரும் ஒட்டு மொத்தமாக இந்தப் பிரச்னையை முடித்து விட்டு தான். மற்ற பிரச்சினைக்கு செல்ல வேண்டும் என்று கூறுவதுடன் எங்களின் நிலைப்பாட்டை கூட்டத்தினர் ஆதரித்து ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும் எங்களின் நிலைப்பாடு தக்வியத்துல் ஈமான்-ன் நிலைப்பாடும், தப்லீக் ஜமாஅத்தின் நிலைப்பாடும் என்று கூற, தலைவர் எங்களைப் பார்த்து இங்கு வந்துள்ள நீங்கள் தப்லீக் ஜமாஅத்தின் ஒட்டு மொத்த பிரதிநிதிகள் அல்ல. நாம் பேசியது காயல் பட்டிணத்தில் ஏற்பட்டுள்ள பிரச்சினைகளைப் பற்றித் தான் என்று சொன்னார்கள். அதற்கு பதிலளித்த ஜாவியா மதர்ஸில் மௌலவி ஷெய்கு அப்துல் காதிர் காஹிரி அவர்கள் பேசும்போது இந்தப் பிரச்சினை தேவ்பந்த், பரேல்வி யிலிருந்து தான் ஆரம்பமானது. ஷிராணியவர் காண்பித்த கிதாபுகளும், அதற்கு மறுப்பாக நாங்கள் காண்பித்த கிதாபுகளும் காயல் பட்டிணத்தில் தொகுக்கப்பட்டது அல்ல. ஆகவே இது உலக அளவில் ஏற்பட்ட பிரச்னை என்று கூறி அமர்ந்து விட்டார். சிறிது நேரம் உச்சமும் பரபரப்பாகவே இருந்தது

மௌலவி M.A. ஹாஜா ஆலிம் பாஸி எழுந்து எங்கள் மீது பலகுற்றச்சாட்டுக்களை கூறி வந்தீர்கள். அதில் ஒன்றுக்கு நாங்கள் தெளிவான பதிலை தந்து விட்டோம். கூட்டமும் ஏற்றுக் கொண்டது.

ஆகவே எங்களை இந்த ஒரு குற்றச் சாட்டை விட்டு நீக்கி விட வேண்டுகிறோம் என்று கூறினார்.

முடிவாக தலைவர் தனது தீர்ப்பில் கீழ்க்கண்ட வாசகத்தை படித்தார். ரஷீத் அஹ்மது கங்கோஹி மவ்லானா அவர்கள் வஹாபியத்தை ஆதரித்துக் கொடுத்த இரு ஒழுக்கங்களை இங்கு வந்த தப்லீக் ஆதரவான உலமாக்கள் ஆதரிக்கவில்லை. மேலும் வஹாபிஸம் வழி கேட்டைச் சார்ந்தது என்பதும் இவர்களின் நிலைப்பாடு. வஹாபிஸத்துக்கு எதிரான கருத்துடையவர்கள் தான் தேவ்பந்த் உலமாக்களும், ஆகவே இங்கு கூடிய உலமாக்கள் அனைவரும் இக்கூற்றை ஆதரித்து ஏற்றுக் கொண்டனர் என்ற வாசகத்தை ஏற்றுக் கொண்டதாகச் சொல்லி தலைவரை தவிர அனைத்து உலமாக்களும் கையெழுத்திட்டனர். கூட்டம் முடிந்து விட்டது. அடுத்த கூட்டத்தை நடத்துவது சம்பந்தமான அறிக்கைகள் பிறகு வெளிவரும் என்று கூறப்பட்டு கூட்டம் இனிதே நிறைவடைந்தது. கையெழுத்துப் போட்ட PHOTO COPY ஒன்று ஜாமியா நிர்வாகத்தில் ஒப்படைக்கப்பட்டது.

வஸ்ஸலாம்

தொகுத்தவர்

அபூ சுமைய்யா